பயிலவழகியசேனை முதல்வனெனுநம்பனே
பலவுகனிபொழின்மேவு குருகைவருமெய்மபனே
சதுரனெதிபதியோபொன்மதிலுயரரங்கனார்
தமதுசெவியுறுகேள்வி யிதமொழிபிரசங்கனே

சகமதனிலெவரோவிவ் வடிவுகொடிணங்கினோர்
தவசுருபமிதுவாகு மெனவிவணடைந்துசேர்
விதமுறுமரன்மாய னிவர்தரமிலங்குமா
வியனியல்புபெறவோது பெயர்குணநிறைந்துசீர்

விபரமவைவெளியாக வரியமறையங்கமாய்
மிகுமிருதியிதிகாச முதலுளவரம்பினூல்
அதுலவபிநவவாய்மை யுரைகளிலடங்கிநீ
டமைதிபெறுபிரமாண வகைதொகைசெய்தின்பமே
அமரிருசமயதீப விரிபனுவலெங்கள்பால்
அருள்புரியுமரிதாச ரடியிணையிறைஞ்சுவாம். (௩)

---

## நூற்பயன்.

வளங்கெழுசெல்வமுண்டா மனக்கருத்தெல்லாமுற்றும்
களங்கமின்ஞானமெய்துங் காட்சிசேர்முத்திவாய்க்கும்
தளங்கமழ்துளவக்கோலத் தாரரிதாதன்வாக்கால்
விளங்கிருசமயநூலின் மெய்ப்பொருள்விரும்புவோர்க்கே. (க)

கண்ணகன்ஞாலத்தீர்நுங் கருப்பற்றையறுக்கவேணும்
எண்ணியவெண்ணியாங்கே யெண்மையினெய்தவேணும்
நண்ணிருசமயமாண்பு நன்கறிவிளக்கமேபோல்
திண்ணநூற்பிறிதொன்றின்மை தெரிந்திடீர்விரைந்திடீரோ. (உ)

வேறு.

இந்துதவழ்பைம்பொழில்சூழ் வளமிக்கஅரிதைநக
ரிறைவனென்னும்
மந்தரபுயத்தண்ண லரிதாதனருள்சுரந்து
வகுத்துச்செய்த

முந்தையிருசமயவிளக் கப்பெருநூலொருகவியை
மொழிந்தோர்கற்றோர்
பைந்துளவப்பரஞ்சுடரி னருட்பேற்றுலிகபரமும்
படைப்பர்மாதோ (௩)

பொய்மைபுகலாகமவாதியர்கள் செருக்குத்திமிரம்
புடைபேர்ந்தோட
மெய்ம்மைபெறுபரவத்து விண்டுவெனயாவருக்கும்
விளக்கமாக
மும்மையெனுந்தமிழ்ப்புலமை யேறறிதாதன்பரிந்து
மொழிந்தவிந்தச்
செம்மையுறுவிருசமய விளக்கமுணரறிஞர்கள்போற்
சிறந்தோர்யாரோ (௪)

வேறு.

இருமாசமய விளக்கமெனப்பேர்
வருமாநூல்புவி வாய்ந்திடலாலிப்
பெருமாமன்னுயிர் பேதைமைநீங்குற்
றிருமாமுத்தியை யெய்வதுதிடனே. (௫)

வேறு.

வேதமேமுதலவாய விண்ணவர்முனிவரோனோர்
ஓதுநூற்புராணஞ்சிற்ப முறுபுறத்துறைநூன்மற்றும்
நீதியினுணர்ந்தோராவர் நீடிருசமயத்தன்மை
போதமாம்விளக்கநூலைப் புரையறத்தெரிநல்லோரே. (௬)

பொன்னிதழ்மலர்த்தண்டேனைப் புரிந்தயில்சுரும்பரென்ன
மன்னிருசமயநீர்மை வகுக்குநல்விளக்கநூலை
நன்னர்மெய்யறிஞர்கொள்வர் நாறுபுண்ணீருண்ணீப்போல்
அன்னியபுன்னூல்வேட்ப ரறிவழிமாந்தர்மாதோ. (௭)

வேறு.

ஆரணத்தின்சாரமென்கோ ஆரிடத்தினுனையென்கோ
வணிவேதாங்க
காரணநூற்கருத்தென்கோ கனதமிழ்வாரிதிக்கொளிர்தண்
கதிரோயென்கோ

தாரணியுமிருபுயக்குன் றரிதாதன்றண்ணருளாற்
றந்தவாய்மைச்
சேணரியுமிருசமய விளக்கமுறைவிழிப்பொருளைத்
தேருங்காலே. (௪)

# பழிச்சினர்ப்பரவல்.

செதுமதியரிநம்புகூர் சிறியவரொடிணங்கியே
திரிதருமெனையன்பின்வா சிலவுறுதிவிளம்புகேம்
இதுபொருண்மருடங்கிடா தினிதுணர்தியென்றுநீ
டிருசமயவிளங்குநூ லெனதிதயமழுந்தவே
முதுகுருவடிவங்கொளா முறைதவறுதலன்றியே
முழுவுறவகளங்கமாய் மொழிமுதன்மையனெம்பிரான்
மதுகையிலுயர்சிங்கமேர் வயிணவகுலதுங்கனும்
வடிவழகியநம்பிசே வடியிணைகள்வணங்குவாம். (௧)

வேறு.

சுந்தரமிலங்குபழ மறைகட்குமாறாய
சொல்லுமெழுநான்காகமம்
துன்மார்க்கமென்றுதெரியாமற்புகழ்ந்திடுந்
துட்டர்கள்செய்செருவடங்க
வந்தனைக்கருகன்மா லென்றுவெளியிட்டாண்ட
வடிவழகியநம்பிபொன்
மலரடிபணிந்துநங் குருவாயடைந்துமிக
மனமகிழ்தேபுயர்ந்தோன்
சந்ததஞ்சிறியவர்க ளோடேயிணங்கித்
தலத்திற்றிரிந்தவென்னைத்
தயையினாலேயழைத் திருசமயநூலினைச்
சங்கையறவோதியேநீ
சிந்தையிலினித்தெளிந் தேயறிந்திடெனவுரை
செப்பியறிவித்தவாசான்
செயசமயசிங்கேறு பெத்தபெருமாளெனுஞ்
செல்வனடிபோற்றுவோமே. (௨)



ஹரிஓம்.

ஸர்வம்விஷ்ணுமயம்ஜகத்.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.







அரிதாசர் திருவடிகளே சரணம்.

# இருசமய விளக்கம்.

முதலாவது

## பாயிரகாண்டம்.

### க - வது, கடவுள்வாழ்த்துப்படலம்.

நீர்வற்றபாரில்உயராதுறுநீடுஞானம்
கூர்வற்றசிந்தைஎதிராசர்குலத்துளானை
போர்வற்றுநாயன்தனைவாழ்பெரும்பூதுரானை
சீர்வற்றசெல்வக்குருராயனைச்சிந்தைசெய்வாம். (க)

அலையிட்டநீரைஅடக்கும்வடவானலம்போல்
தலையிட்டுவாதுமுயல்சாக்கியர்தம்மைவென்று
மலையிட்டதீபம்எனமால்சமயத்தைமண்மேல்
நிலையிட்டபூதூர்எதிராசனைநெஞ்சில்வைப்பாம். (உ)

கமிழ்கின்றவாசவகுளச்செழுங்கண்ணிஅம்தேன்
உமிழ்கின்றதிண்தோள்அரசைப்பவஓதநீர்க்குள்
அமிழ்கின்றஎன்னைக்கரைஏற்றுதற்காகவேதம்
தமிழ்செய்தஞானக்குருகூரனைத்தாள்துதிப்பாம்.

நாலுமுகம் ஆய்நவில்வாணிஎன்நாவில்மேவ
மானோர் அயன் அங்கவர்போல்பலமாக்கணங்கட்
கானதுகரத்துளவேத்திரத்தையர்தெய்வச்
சேனாபதியார்மலர்த்தாள் இணைசென்னிவைப்பாம். (ச)

கிரிபோல்விளங்கிக்கிளரும்புயக்கிட்ணராயன்
தனைமீதுசிங்காத்திரியில்செயத்தம்பம்நாட்ட
வரம் ஆதரவால் அளித்தேவடகூவம்மேவும்
கருமாமணிவண்ணனைநீடுகருத்தில்வைப்பாம். (ரு)

படமாசுணமும்முதிரா இளம்பச்சைஆலும்
திடமாமறைஅந்தமும் ஆகிநற்செல்வன் ஆன
வடமாமலைஅண்ணனைதுள்ளமும்வைகநாளும்
இடமாம்ஒருவற்கடியோங்களியாங்கள்தாமே. (சா)

விரிதாதணியும்தொடைமேவியவேந்தன் ஆன
அரிதாதன்நினைத்தஎலாம்முடித்தாண்டகோவை
தெரிதாதரவேதகிரித்தடச்செங்கண்மாலை
பெரிதாதரிப்பார்க்கரிதோபிறவாதபேறே. (எ)

க-வது கடவுள்வாழ்த்துப்படலம் முற்றும் ஆ திருவிருத்தம் (எ)

அரிதாசர் திருவடிகளே சரணம்.



## உ - வது, நூற்பெயர் விளக்கப்படலம்.

பூணின்றபணுடவியால்ஒளிர்பூதநாதன்
சேணின்கொண்டலைநேர்திருமேனிஅம்தேவன்என்ன
மாணின்கொண்டவருள்பரவத்துவைவண்மைஆக
காணின்றதுவேதமியேன்தன்கருத்துமாதோ. (க)

சதுவேதமும்ஆகமமும்கொடுசார்ங்கபாணி
விதுவேணியினன்எனும்மூர்த்திகள்மேன்மைநோக்கில்
கதுவேழ்கடல்சூழ்உலகத்தவர்கட்கெலாம்அங்
கதுவேஅதுவேபரம்ஆய்வியப்பாகையாலே. (உ)

ஏர் ஆரணம்ஆகமம்நீடிதிகாசம்ஆதி
சார்வாகியநூல்பொதுநூல்கொடுதத்துவத்தை
ஆராயும்இடத்தரன்மால்புகழ்அங்குளாக்கும்
சீர் ஆனமொழிக்கெதிர்உத்தரம்செப்பவேண்டி. (ந)

திரமாகிய ஆகமமேஒருசெய்யமாதும்
அருமாமறைமற்றொருதோகையும்ஆகநாட்டி
ஒருமாதுறைபாகனைமாலேஉகந்துபோற்றும்
இருமாசமயத்துவிளக்கம்இயம்பல்உற்றேன். (௪)

ஒருதேவதையேஉலகுக்குயர்நாதன்என்ன
அருமாமறைநிச்சயித்தோதிஅமைத்திருக்க
இருமாசமயத்துவிளக்கம்என்றிந்தநூற்கு
திரமாகியபேர்வருகாரணம்செப்பவேண்டில். (௫)

திரம்பூந்தியஇப்பெருநூலில்செகம்தனக்கு
பிரமங்கள்இரண்டுளஎன்றுபிரித்ததில்லை
இருமைச்சிவன்மால்சமயங்களை இன்னஇன்ன
தரம்என்றுவிளக்கியதாதலில்தக்கதாமே. (௬)

நூலீதுரைசெய்திடநான்நுவன்றிங்குநாட்டும்
வேலேய்விழியார்களில்மூக்கணன்வீறுரைப்பாள்
பாலேய்மொழி ஆகமவல்லிஅப்பங்கயக்கண்
மாலேபரம்என்பவள் ஆரணவல்லிஎன்பாள். (௭)

அப்பாவைமார்கள்இருவோரும்அறைந்ததாக
இப்பார்மதிக்கஇயலும்பதினெண்புராண
வைப்பானசொல்லும்உயர்வைதிகவாக்கும்எல்லாம்
ஒப்பாகஞாலத்தினில்கூட்டிஉரைக்கல்உற்றேன். (௮)

௨-வது, நூற்பெயர்விளக்கப்படலம்முற்றும். ஆ திருவிருத்தம். (௧௫)

அரிதாசர்திருவடிகளேசரணம்.

---

## ௩-வது, விடயத்திறப்படலம்.

தாநார்துளவத்தரிசங்கரர்தம்மைஏத்தும்
வேதாகமத்தைத்தெரிந்தோதும்இம்மெய்ம்மைநூலில்
தீதேதும்இலாவிடயத்தின்திறங்கள்தம்மை
ஏதேதியல்பால்சொலிநாட்டியதென்றுகேட்கில். (௧)

பேரின்னனஆய்ந்திகழ்கின்றஇப்பெண்கள்ஆழிப்
பாருந்திசையும்படர்கார்இருள்பாறிஓட
ஈரும்கதிரோன் மகரத்தைவந்துற்றபோதில்
சீரொன்றியஆரணிமூழ்கிடச்சென்றஆறும். (௨)

தண்ணம்புனலில்படிவேலையில்தன்தனுதாம்
எண்ணம்பயில்சங்கரர்நாரணர்என்றுளோரை
நண்ணும்பரம்என்றிருவோரும்நவின்றஆறும்
வெண்ணன்நகையார்க்கதில்ஈசுவிளைந்தஆறும். (௩)

எராரணிமாநதியின்கரைஎய்திவேத
ஆராமம்அணைந்ததில்எய்தியஅந்தணாளர்
நேராகியசந்நிதிமன்னியநீள்கண்மானூர்
சீராகியதத்துவநிச்சயம்செய்தஆறும். (௪)

திரம்ஆகியதத்துவநிச்சயம்செய்தபோதில்
மருமேவியவார்குழல்ஆகமவல்லிஎன்பாள்
பொருவாகியஆகமசைவபுராணம்ஆதி
விரிவாகியபல்வகைநூலும்விரித்தஆறும். (௫)

ஒல்லும்படிஇப்பெருநூற்பொருள்ஓர்ந்துமேலே
சொல்லும்படியேநினைவாகித்துணைத்தனங்கள்
வல்லின்படிஆம்இவள்பாரில்வழக்கைமுந்தி
செல்லும்படிதன்விரகால்உரைசெய்தஆறும். (௬)

திரம்ஆகியபார்வழக்கம்தனில்சிற்பநூலால்
அரவாபரணத்துமைபாகன்அலாதபேர்க்கு
மருவாலயத்தில்பிரமத்தலமாப்பதிட்டை
உரையாதெனநீடுலகத்தில்உரைக்கும்ஆறும். (எ)

தண்ணம்புலிசேர்சடையற்குயர்சார்ங்கபாணி
எண்ணும்பரிவாரமதாகிஇருக்கும்ஆறும்
வண்ணம்கரியமதுசூதன்வராகம்ஆகி
நண்ணும்சிவன்மெல்அடிதேடிநடந்தஆறும். (அ)

அரிமோகினிஆய்அரனைப்புணர்ந்தையனை
தரையோர்அறியும்படிபெற்றதும்சக்கரக்கை
கருமாமுகில்மானும்நன்மேனிஅம்கஞ்சநாபன்
வருசாபவசத்தினன்என்னவகுத்தஆறும். (௯)

நக்கன்தனைஇன்றியவேள்விடத்திவேதா
மெய்க்கண்ணன்எனத்தகுதேவர்விளிந்தஆறும்
மைக்கந்தரன்ஓர்சரபத்துருவாகிவந்து
செய்க்கண்நரகேசரிதன்னைச்செயித்தஆறும். (௰)

செம்பங்கயமேல்உறைநான்முகன்தேர்கடாவ
நம்பன்புரம்மூன்றெரிஏறநகைத்தநாளில்
வெம்புஞ்சினவெவ்விடையும்மகமேருவில்லுக்
கம்பும்எனநின்றரிஏவல்புரிந்தஆறும். (கக)

ஆகாசமோடுதிசைஎங்கணும்அங்கிபொங்க
காகோதரத்தில்உயர்வாசுகிகான்றவெய்ய
மாகாளகூடந்தனையேமுனம்வானுளோர்கள்
நோகாமல்அந்தமகதேவன்நுகர்ந்தஆறும். (கஉ)

மாயன்கயிலைக்கிரியாணிடைமைந்தன்வேண்டி
போய்நின்றதுவும்பரசாயுதப்போர்இராமன்
ஏயும்சிவன்ஆம்சமதங்கிஇடத்துதித்து
காயும்படைவிஞ்சையும்ஈசனிற்கற்றஆறும்.. (கங)

ஆசற்றுயர்பாசுபதத்தைஅருச்சுனற்கா
ஈசற்கிதம்மாயவன்பேசிஇரந்தஆறும்
காசற்றொளிர்பூண்மதுசூதனன்கண்இடந்தே
பூசித்ததனுல்அடல்ஆழிபொறுத்தஆறும். (கச)

பொடிபூசியைமைக்கடற்சேதுவில்பூசைசெய்து
சுடர்வேல்இராமன்பிரமத்திதொலைத்தஆறும்
இடம்ஆகியகாசியில்எய்தியயாவருக்கும்
அடைவேபரிவால்அரன்முத்திஅளிக்கும்ஆறும். (கரு)

உரைபற்றியநீற்றுபஞ்சாக்கரருத்திராக்க
தாரணத்தியல்பால்உயர்புண்ணியம்சாரும்ஆறும்
பொருவற்றிடுநற்சிவதீக்கையும்பூசைதானும்
இருமைக்கும்இசைத்திடுசாதனம்என்றஆறும். (கசா)

உன்னும்சரிதைகிரிகைத்தொழில்யோகம்ஞானம்
என்னும்திறத்தால்மனம்ஏகம்உற்றேத்துவார்க்கு
பன்னும்படிஆகியநாலுவகைப்பதங்கள்
கொன்னின்றமழுப்படைஈசர்கொடுக்கும்ஆறும். (கஎ)

தன்னைப்பணிந்துதவம்செய்திடுவோர்தமக்கு
பின்னைக்கெனுதுபெருமாவரப்பேறுநல்கும்
பொன்னைப்பொருதேஅரன்அன்றிஇப்பூதலத்தில்
பன்னற்குரியார்எவர்என்றுபகர்ந்தஆறும். (கஅ)

வீருகியநற்சிவநூலில்விரிந்ததொண்ணூற்
ருரும்உடல்தத்துவத்தன்மையும்அஞ்செனப்பேர்ப்
பேருகியதீக்கையும்முத்திபேதம்ஆறும்
தேருதவர்முத்தர்கள்அல்லனச்செப்பும்ஆறும் (க௯)

பொருவார்மலர்ஐங்கணைகொண்டெதிர்போர்செய்வேளை
எரிஎறவிழித்தருள்சங்கரன்என்னும்மூர்த்தி
அருநால்உருநால்அருவோடுருஒன்றவைக்கும்
பரம்ஆய்உறையும்படிதன்னைப்பகர்ந்தஆறும். (உ௰)

தரையைத்தொடங்கித்தொகைசெய்திடுதத்துவங்கள்
இருபத்துநாலும்உயர்மாயைகள்ஏழும்அஞ்சாய்
திரம்உற்றிடுநீள்சிவதத்துவமும்தெளிந்தோர்
வரமுத்தர்கள்என்றுரைசெய்திடும்வாய்மைதானும் (உக)

பெருக்கும்பயபத்தியினேடுபிராணலிங்கம்
தரிக்கின்றவரும்சிவன்ஆகும்அத்தன்மைதானும்
தெரிக்கின்றஈசன்திருமாலியம்தீண்டஒண்ணு
திருக்கின்றதுமின்மலர்இன்மையின்என்றஆறும். (உஉ)

ஆரைப்புவியில்பணிகின்றதும்ஐம்முகன்பால்
சேரப்பெறும்என்பதும்நற்குணச்செய்கையாலே
நேரற்றவன்அங்கவன்ஆகியசீர்மைதன்னுல்
பாரிற்பகவான்எனும்நாமம்படைத்தஆறும். (உ௩)

நடைமன்னியநான்மறையில்தெளிநாரதனேடு
நிடம்என்பதனில்கிரணம்புனைநீடுருவப்
படைமன்னியபங்கயச்செங்கரப்பாவையங்கன்
இடம்மன்னும்உபாசனையேசொனதென்றஆறும். (உ௪)

மயம்மிக்குயர்ஏழ்பரிச்சூரியமண்டலத்தில்
இயல்புற்றிடுசோதியதாகிஇருந்துதன்னுல்
நியமப்படும்பல்உயிர்தம்மையும்நீடுநெஞ்சம்
முயல்விப்பவன்முக்கணன்என்னமொழிந்தஆறும். (உ௫)

கேள்விப்பசுவின்பதிஆகிகிளர்ந்துளானும்
வேள்வித்துறைஉற்றவிர்ப்பாகம்விரும்புவானும்
வாழ்வுற்றவேள்விப்பதிஆகிவயங்குவானும்
நீள்வெற்றிமழுக்கரன்என்னநிகழ்த்தும்ஆறும். (உ௬)

முற்றும்பகர்ந்துவிரகாகமுடித்தபின்பு
மற்றங்கவளுக்கெதிர்ஆரணவல்லிஎன்பாள்
நற்றும்சுருதித்தொகையும்மறைநாவின்அந்தம்
பற்றும்நியமோபநிடங்கள்முப்பத்திரண்டும். (உஎ)

வருதாமதராசதசாத்திகவண்புராணம்
உரவோர்தெளிசீர்உபபாரபுராணமோடும்
அரிதாம்மிருதித்தொகையும்அதனுக்கிசைந்த
விரிவாம்உபமாமிருதிப்பெயர்மேவுநூலும். (உஅ)

வசைஇன்றியபஞ்சஇராத்திரம்வாய்த்தவைகா
னசமும்இருமுச்சமயங்களின்நாமநூலும்
அசைவின்றியசோதிடவாகடம்ஆதிஆக
இசையும்பொருநூல்களும்சார்வுறும்வனைநூலும். (உகூ)

பகரும்சொலவின்பரமார்த்தமும்பாரின்மீதே
திகழும்பலஆகியசைவசித்தாந்தநூலை
மிகவென்றிடுகண்டனமும்பின்விரிப்பதாக
தொகைமன்னியபார்வழக்கிற்குமுன்சொன்னஆறும். (௩௰)

செப்பந்தருபார்வழக்கத்தினில்சிற்பநூல்கள்
முப்பத்திரண்டும்பிரமத்தலமூர்த்திஆக
வைப்புற்றவன்மால்எனச்சொன்னதும்வண்மைமாலுக்
கப்புச்செறிசெஞ்சடைச்சங்கரன்ஆதியானை. (௩க)

துன்றும்பரிவாரகர்என்றும்துவாரபாலர்
என்றும்மதுருத்தனைஈசருக்கீசன்என்றும்
மன்றம்துளவத்தவன்உத்தமன்மற்றுளோர்கள்
புன்றன்மையின்மத்திமர்என்றுபுகன்றஆறும். (௩உ)

அந்தண்கமலத்துறையும்சதுராননத்தோன்
உந்தும்பரிவால்இருபாதம்உவந்துபோற்ற
வந்தம்புவிமங்கையைஏற்றவராகர்ஈசன்
அந்தண்கழல்தேடியதில்என்றறைந்தஆறும். (௩௩)

காவாவிதன்னைக்கனமோகினிஆய்மயக்கி
கோவாழிஅங்கைஅரிதன்உருக்கொண்டஆறும்
மாவாலகில்லியர்கள்வேதனில்வந்தவாபோல்
சேவாகனற்குமகசாத்தன்செனித்தஆறும். (௩ச)

மாலேபுருடோத்தமன்மற்றுளதேவர்மாதர்
போலேஎனப்பல்பிரமாணம்புகன்றஆறும்
நூலேதிருமாமுனிவோர்கள்நுவன்றசாபத்
தாலேதிருமாற்கிடையூறடையாதஆறும். (௩௫)

விதிதாதையினார்இருதாளினில்மேவுஞானத்
ததிமேதையன்ஆகியசீர்புனைஅம்பரீடன்
முதல்ஆகியபேர்தமக்கும்முனிவோர்கள்வாக்கில்
உதிர்சாபமோடவ்அபிசாரஉறுதஆறும். (௩௬)

மடமங்கைபாகன்மிருசாபவசத்தன்என்னும்
படியும்புகழ்விச்சுவசிட்டியர்பண்ணும்வேள்வி
இடைவந்துதக்கன்அவமானம்இசைப்பஇந்துச்
சடையன்தனதாம்கயிலைக்கிரிசார்ந்தஆறும். (௩௭)

மற்றந்தமேன்மைபுனைதக்கன்மகத்தைநண்ணி
எற்றங்குமேனிச்சதிதேவிஇறந்தஆறும்
அற்றந்தகண்டன்அதனால்வெகுண்டந்தவேள்வி
முற்றும்சிதைத்துச்சுரரைக்கொலைமூண்டஆறும். (௩௮)

உடைந்தோடிவானோர்மலரோன்உலகத்தைஎல்லை
அடைந்தேபணிந்தங்கவர்இன்னல்அறைந்தஆறும்
தடந்தாமரையோன்சிவன்கோபம்தணித்தமர்க்கண்
மடிந்தார்கள்உய்யும்படிவேண்டியவாறுதானும். (௩௯)

அழித்திட்டவேள்விக்கயனோடரன்வந்துதக்கன்
பிழைக்கப்பணித்துக்குறைவேள்விபின்னும்தொடங்க
எழுத்தெட்டுடையபெருமான்அவண்எய்தலோடும்
வழுத்திச்சிவன்நான்முகனோடுவந்தித்தவாறும். (௪௦)

மலரோனும்மாலும்மருவாஒருமாமகத்தை
இலைமேவுசூலப்படையான்அழித்திட்டதெல்லாம்
சலமோடுவேள்விதசகண்டன்தகர்த்ததற்கே
சிவமீதில்ஒக்கும்எனஓதியநீர்மைதானும். (௪௧)

பொன்னார்பினாகச்சிலைஎந்திபுகுந்தபோதும்
அன்னோர்இல்வாணன்அமர்தன்னிலும்ஆர்தவத்தின்
நன்னாரணமாமுனியோடமர்நண்ணுகாலும்
சொன்னீடுசூலப்படைச்சங்கரன்தோற்றஆறும். (௪௨)

இது அன்றிநக்கன்விருகாசுரற்கிவரத்தும்
அது அன்றியும் அந்தகன் அந்தகர் அன்றும் அன்றும்
மதுதுன்றுகொன்றைஅரன்வேண்டஎம்மால் அளித்தே
கதுமென்றிடுக்கணினில்நின்றுகடந்த ஆறும். (௪௩)

கங்காளம்உற்ற அரனோடயன்காரி ஆதி
அங்கானவற்கம் அவெலாம் அடங்கூழி தன்னில்
தங்காதுமாளமிகவும்தகிக்கின்றசற்வ
சங்காரவத்து அரியேஎனுந்தன்மைதானும். (௪௪)

சோராததன்மைஉளவச்சிரத்தானும் ஆடல்
பேராடகன்தன் மணிமார்பும்பிளந்ததேபோல்
கூரார்எயிற்றுச்சரபத்தையும்கூறுசெய்து
தாரார்புயத்துநரசிங்கம்தழைத்த ஆறும். (௪௫)

அவ்வாள் அரிபின் அமரர்க்கரனுக்கிரங்கி
வெவ்வாள் அவுணன்உதிரத்துவிளைந்தவெய்யோர்
தெவ்வாருசத்திசமூகம்தமையும்செயித்தே
தவ்வாதுநின்றிப்புவிமீதுதயங்கும் ஆறும். (௪௬)

பண்ணார்மொழி அம்பிகைமேவியபங்கினன்தன்
தண்ணார்சடையேதகைமேவுசமித்ததாக
நண்ணார்புரத்தைத்தழலுக்கிரைநல்கவேண்டி
விண்ணோருடன் ஓர்மகவேள்விவிளைத்த ஆறும். (௪௭)

சேரார்மருவப்புரம்மூன்றுசெயித்தநாளில்
பாராகியதேர்பதியாமல்பரிப்பதற்கோர்
ஏரார்மருப்புவிடை ஆகியும்ஏவதாயும்
ஆரார்சடைஈசனுக்கந்தரியாமி ஆயும். (௪௮)

பொருள்ஒன்றியபாற்பசு ஆகியும்புத்தன் ஆயும்
திருமன்னுமார்பன் அருள்செய்ததும்தேவர்வேண்ட
விரைதுன்றுகஞ்சத்தயன்தேரும்வியப்பொடோர்ந்தங்
கரிபஞ்சராமாஉபதேசம் அளித்த ஆறும். (௪௯)

ஆழிக்கடல்வாய்தனில்வந்தெழும் ஆலகாலம்
ஊழிக்கனல்போல்வருநாளில் அவ்வோங்குநஞ்சை
வாழிக்கருடக்கொடியானைமனத்துள்வைத்து
பூழித்திருமேனியன்முன்புபொசித்த ஆறும். (௫௰)

பாலார்கடலில்துயில்வார்ஒருபாலன்வேண்டி
சேலார்அருவிக்கயிலைக்கிரிசேர்ந்தநாளில்
மேலாகியகேசவநாமவியாக்கியானம்
ஆலாலமிடற்றுமைபாகன்அறைந்தஆறும். (ருக)

பொருவார்பரசாயுதம்ஏந்தியபோர்இராமற்
கரனோடரன்மெய்ப்பிறிவாம்சமதங்கிமேல்நாள்
குருஆய்மிகுதந்தையும்ஆனதுகொண்டவர்க்கு
பரன்ஆயினதன்மையன்அல்எனும்பண்புதானும். (ருஉ)

திசைபற்றியபாரதப்பூசல்செயிப்பதற்கா
விசையற்குயர்பாசுபதாத்திரம்வேண்டிமாயன்
இசையச்சிவன்பால்இரந்தான்என்றிசைத்தசொற்கு
பசைஅற்றிடும்உத்தரம்ஓதியபண்புதானும். (ருங)

அரன்பால்அரிகண்அணிந்தாழிபெற்றான்எனும்சொல்
உரந்தான்அலஆழிபண்டேஉளதுற்றுபாசித்
திரந்தாழியில்பெற்றனென்சூலம்யான்என்றுமைக்கு
வரன்தான்இசைத்தான்எனஓதிடும்வாய்மைதானும். (ருச)

மதிதங்கியசெஞ்சடைநாதன்மகிழ்ந்துபோற்ற
கதிமன்னியமால்தரஞானநற்கண்ணும்யாரும்
துதிசெய்வரமும்திரிமூர்த்தியிற்சொல்லிஎண்ணும்
பதமும்மிகுஞானமும்நக்கன்படைத்தஆறும். (ருரு)

அன்றங்களித்தவரபாலனம்ஆக்கமாயன்
சென்றம்புவிக்குள்சிவபூசனைசெய்தஆறும்
மின்றங்குநேமிநெடுமால்அருள்மேவுகண்டா
கன்றன்தனக்குப்பிரமத்திகவ்வாதஆறும். (ருசா)

சங்கம்தரளம்தமைஉந்துதரங்கம்எங்கும்
பொங்கும்துறைதங்கியகங்கைபொருந்துகாசி
வெங்கண்நெடுமாசுணமீதுவிழித்துறங்கும்
செங்கண்நெடுமால்தலம்என்றுணைசெய்தஆறும். (ருஎ)

அந்தத்தலத்தில்அகலாப்பிரமத்திநீங்க
இந்தத்தலத்தைத்தமியேற்கருள்என்றிரந்த
கந்தர்ப்பவருக்குயர்காசியைக்காதலால்ஈய்ந்
துந்திக்கமலன்பிரயாகையைஉற்றஆறும். (ருஅ)

மாதாரகம் ஆம்வரராமநன்மந்திரத்தை
வேதா அருளால்உபதேசம்விளைத்தபின்னர்
சீதாகரம் ஆம்புனற்காசியில்சீவகோடிக்
காதாரமதாய் அரன்முத்தி அளிக்கும்ஆறும். (ருகூ)

ஆசின்றியசொற்சிவபூசையும் அஞ்செழுத்தை
பேசும்திறமும்திருநீறணிபெற்றிதானும்
மாசின்றியஞானமும்காமமும்வாய்ப்பதல்லால்
ஏசின்றியமுத்தியின்ஏது அல்என்றஆறும். (சுய)

அக்காமியத்தினொடுஞானம்உண்டாதல்தானும்
மெய்க்காளகண்டற்கொருமூன்றுவிதங்கள் ஆக
புக்கோதுபூசையினில்சாத்திகபூசைசெய்த
தக்கோர்களுக்கேஎனும்உத்தரம்தந்தஆறும். (சுக)

நிறைகின்றஞானநெறிஆகமநீதிகூர
செறிகின்றஅன்பினொடுபூசனைசெய்துளோர்க்கும்
நறைதுன்றுகொன்றைமதுமாலைநலம்கொள்வேணி
இறைவன்கொடுக்கும்பதம்அத்திரம்என்றஆறும். (சுஉ)

திரம்உற்றிலகும்புவிஆதிசிவாந்தம்ஆக
வருதத்துவம்முப்பதோடாறெனவைக்கும்ஆறும்
அரனுக்கருவோடுருமிச்சிரம்ஆகஒன்பான்
உருஉண்டெனல்வைதிகம்ஒன்றெனஓதும்ஆறும். (சுங)

வீறுகியசீர்உடல்தத்துவம்மேயதொண்ணூற்
றுறேஅலவைதிகம்தன்னில்அனேகம்என்ன
பேறுகியபிண்டஉற்பத்தியில்பேசும்ஆறும்
தேறுதவரும்தெளிகைக்குரைசெய்தஆறும். (சுச)

நீங்காதநீலமணிகண்டனைநீதிகூர
பாங்கானபூசைபுரிகின்றவர்பஞ்சசுத்திக்
காங்காகமத்தின்அடைவேளெடுத்தஞ்செழுத்துக்
கோங்காரயுத்தம்உறஉச்சரித்தோதும்ஆறும். (சுரு)

அத்தன்மைஆம்அப்ரணவத்தினைஆரணத்தோ
டெத்தன்மைநாலும்அரியின்மயம்என்றஆறும்
உத்துங்கம்ஆனதிருஎட்டெழுத்தோடொன்று
மெய்த்தன்மைஆனபுவிமீதுவிளங்கும்ஆறும். (சுசு)

மயம்முந்துவேதம்உணர்மாயையின்வாதசங்கா
சியரும்பரிந்துதிருஎட்டெழுத்தோதுமாபோல்
அயல்ஒன்றும்ஓதாமையினாலேஅஞ்சக்கரங்கள்
இயல்கின்றசாமானியமந்திரம்என்றஆறும். (சுஎ)

திரம்உற்றஈசன்திருமாலியம்நீண்டுகைக்கும்
அருகத்தஅல்லஎனும்வாய்மையும்ஆன்மலிங்க
தரணத்தைஆறுவிதமுத்திரைதம்மைமிக்க
பரதத்துவம்அல்லஎனும்வைதிகப்பண்புதானும். (சுஅ)

பொற்புற்றபுராணத்திலும்வேதப்பொருட்கொவ்வாமல்
நிற்புற்றுவீறுபுனைதாமதநீதிதோன்ற
சொற்பெற்றபாவங்களும்முத்தியைத்தூரம்ஆக்க
கற்பித்தமாமோகனம்என்றுகழித்தஆறும். (சுகூ)

மேலோர்கள்கீழ்மையவராக்கடைமேன்மைஆக
பூலோகமீதுகலிகாலம்பொருந்தும்ஆறும்
ஆலாலநாகஅணையானிடத்தன்பிலாதார்
ஏலோகநீதிபுனைபாடண்டர்என்றஆறும். (எய)

நிகழ்கின்றவேதநெறிசேர்தலின்நேமிமாலை
பகரும்புராணம்உயர்சாத்திகபாகம்என்றும்
திகழ்சங்கொடாழிதிருமண்குறிதீட்டல்வேதம்
புகழ்கின்றமுத்தர்இயல்பென்னப்புகன்றஆறும். (எக)

பார்த்தற்குயர்சாரதியார்பொற்பதம்விளக்கும்
தீர்த்தப்பிரசாதம்நுகர்ந்திடும்செய்கைஎல்லாம்
ஏத்தற்கரிதாகியமுத்தியின்ஏதுஎன்று
வாய்த்திட்டசெழும்பிரமாணம்வழங்கும்ஆறும். (எஉ)

சதுமாமறையால்இசைவாகியசாத்திரத்தால்
விதம்ஆகியபல்பிரமாணம்விளங்கஓதி
மதுவார்கமலம்திருஉந்திமலர்ந்தமாயன்
பதமேபரமபதம்என்றுபகர்ந்தஆறும். (எங)

தருமார்த்தகாமமொடுமுத்திஅச்சார்ங்கபாணி
திரமாக்கொடுப்பன்என்னும்ஆறும்அத்தேவதேவன்
அருளால்பொருந்தும்அதுஅன்றிஅகண்டமுத்திக்
கொருமார்க்கமும்இல்அயல்என்னஉரைத்தஆறும். (எச)

இயல்நக்கனைவந்தனைபாத்திரன்என்றுபண்பால்
உயர்மெய்ப்புவியிற்சிலர்எண்ணிஉரைப்பதெல்லாம்
பயபுத்தியினும்அவன்காமியபாகம்எல்லாம்
தயைஉற்றருள்தன்மையினும்எனச்சாற்றும்ஆறும். (எரு)

பரம்ஆகியதேஅவனேஎனும்பத்தியாலும்
அரிதாகியமுத்தியைஎய்திடும்ஆசையாலும்
கருதாதரவால்பணிவந்தனைகைக்கொளும்சீர்
வரபாத்திரன்மால்எனஓதியவாறுதானும். (எசு)

பாலத்துவிழிச்சிவனைப்பகவான்எனும்பேர்
கோலச்சசிசூரியர்தங்களைக்கூறுமாபோல்
ஓலக்கடல்சூழ்புவியோர்உபசாரம்ஆக
சீலத்துடன்ஓதுவர்என்றுரைசெய்தஆறும் (எஎ)

குளிர்பொற்றுளவத்தரிஆறுகுணங்களாலும்
அளவற்றவன்என்றருமாமறைஆனஎல்லாம்
வெளிஇட்டுரைசெய்தலினால்அவ்விளங்குமாலே
தெளியப்பகவான்எனநிச்சயம்செய்தஆறும், (எஅ)

நாராயணோபநிடம்மைவிழிநாரிபங்கன்
ஆராதனைசொல்லியதென்றததின்கருத்தை
ஓராதுசத்தசலத்திற்பொருள்ஓதலால்ஓர்
சாராககூறிஉளதென்றிடும்தன்மைதானும். (எகூ)

மெய்ந்நான்மறையைத்தொகைசெய்துவிளம்புகின்ற
அந்நாரணோபநிடம்தன்னில்அனேகம்ஆக
நன்னாரணனைப்பரன்என்றுநவின்றுநாட்டி
அன்னானதுபாசனைசொல்லிஅமைத்தஆறும். (அ0)

சீராகியஇம்மறைசொன்னதிரம்தனைப்போல்
ஏரார்பலநூற்பிரமாணத்தியற்கையாலும்
நாராயணனுக்கிமவான்மடநாரிபாகன்
ஆராதகன்என்பதுசொல்லிஅமைத்தஆறும். (அக)

மொய்ம்பார்கரமும்மதவெங்கரிமூலம்என்ன
கம்பார்கமலக்கரமாயவன்காத்தமேல்நாள்
அம்போருகன்ஐம்முகன்ஆகியர்அத்தலம்போம்
தெம்பேர்அலஇங்கிவைஎன்னஇருந்தஆறும். (அஉ)

அரன்தான்உபாசித்தமைஅன்றியும்அன்னுமைக்கும்
வரமாமிருகண்டுவின்மாமகனுக்கும்வாய்மை
திரம்ஆகியமாலின்உபாசனைசெப்பிசெய்வித்
துரம்ஆகியநீடுலகத்தில்உவந்தஆறும். (அங)

மாலாரதுபாசனைநிற்கஅம்மாலின்மார்பத்
தேலார்குழலாள்தன்உபாசனையேஇயற்றி
பாலார்உமையாள்பதியேமுதல்பற்பலோரும்
நாலாவிதம்ஆகியதம்பதம்நண்ணும்ஆறும். (அச)

கள்ளார்மலர்மேலுறைவோனொடுகண்ணுதற்கு
நள்ளாவருதோற்றமொடுக்கமுமநாரணன்பால்
உள்ளாகும்அன்றிஅவன்அன்னவைஒன்றும்ஒன்றான்
எள்ளாதுநிற்பன்நிலைஆய்எனஎன்றஆறும். (அரு)

அரியில்துயிலும்பெருமான்அவதாரம்எல்லாம்
தருமத்தைஆக்கமிகுதுட்டர்கள்தம்மைநீக்க
கருதிற்சுருதித்தொகைதங்களைக்காக்கஎன்றே
பருதிப்பொருளில்தெளிவாகப்பகர்ந்தஆறும். (அசு)

உதயக்கதிர்மண்டலத்துள்ஒளிஆகிஎல்லார்
இதயத்தினையும்முயல்விப்பவன்என்றும்வேணி
மதிவைத்திடும்சங்கரன்என்னவருத்தல்தானும்
முதுசொற்சலமேஎனும்மாற்றம்மொழிந்தஆறும். (அஎ)

அணைவோர்அகத்தின்உறைவானும்அருக்கன்வட்டம்
தனில்வாழ்பவனும்இருகஞ்சத்தடங்கண்உள்ளான்
எனமாமறையும்பலநூலும்இயம்பலால்அக்
கனகாம்பரமால்எனநிச்சயம்கண்டஆறும். (அஅ)

அரனைச்சுரர்வேள்வியின்அப்புரம்ஆக்கலானும்
வளைவுற்றவனுக்கவிமிச்சில்வழங்கலானும்
கருதிற்பசுவின்பதிஆம்பெயர்கண்ணுதற்கு
பரிவுற்றிமையோர்வரம்ஈயப்பலித்ததானும். (அகூ)

மதிஒன்றியசெஞ்சடைவானவன்வாய்த்தவேள்விப்
பதிஅல்அவனும்பலதேவரும்பாருளோரும்
எதிர்இன்றியவேள்விகள்தம்மில்எசிக்கநின்றான்
பதுமம்திகழ்உந்தியனேஎனும்பான்மைதானும். (கூ0)

ஏர்க்கும்படி கூறியபின்பிருவோர்கள் ஆம்இவ்
வார்க்குங்குமமென்முலைமங்கையர்வாய்மை ஆக
பார்க்கும்பொருளாப்பரவத்துவைப்பாரின்மீதே
ஆர்க்குந்தெரியும்படி பேசுவதாயினேன் ஆல். (௬௧)

௩ - வது. விடயத்திறப்படலம் முற்றும். ஆ. திருவிருத்தம். [௱௬]

அரிதாசர் திருவடிகளேசரணம்.

---

## ௪ - வது, புராணவிவேகப்படலம்.

அரிசங்கரர் அந்தர அந்தரம் ஆய்ந்திந்நூலில்
தெரிகின்றதனால்பயன்ஏதெனில்சிற்பரத்தின்
சொரூபம்தெரியாதவர் முத்திதொடர்ந்திடார்என்
றுணர்த்திடும்நான்மறை ஆதலின் ஓதல்உற்றேன். (௧)

வளம்ஒன்றிய அப்பரவத்துவைவாய்மையாலே
அளவின்றிடுதற்கெளிதோஎனில் ஆடகச்சீர்
நளினம்திகழ்வாறெடுமாமறைநாலுநாண
எளிதன்றதனால்உலகத்தவர்யாவர்காண்பார். (௨)

அரிதென்னினும் அப்பரவத்துவுக்கந்தவேத
புருடன்பிரமா முதலோர்செழும்பொற்பிதென்றும்
சொரூபம்இதுநாமமும்ஈதெனச்சொன்னசொன்ன
உரையின்படியேதமியேனும்உரைப்பதானேன் (௩)

அன்றன்முகனேமுதலோருடன் ஆரணங்கள்
இன்றன்றஉலகில்பரதேவதையென்பதெல்லாம்
சொன்னால்முதலே அதுநிற்க அச்சொற்கள்தம்மை
பின்னேன்மொழியப்படுமென்பதுபேசவேண்டில். (௪)

அகல்வேதநூலைமனமாச்சரம் அற்றுணர்ந்தோர்
பிருசிற்பரத்தைதெளிகாண்பர் அவ்வேதநன்னூல்
சகலாதிகாரம் அல ஆதலின்தண்தமிழ்ப்பாத்
தொகையால்உலகர்க்கிதமா இதுசொல்லல்உற்றேன். (௫)

மைவாரிசூழளயில்கொண்டியர்மாநிலத்தில்
மெய்வாய்மைஆணமறைநாவின்விரிந்தசெஞ்சொல்
தவ்வாதஇந்தப்பெருநூல்சகலாதிகாரம்
எவ்வாறுபெற்றதெனும்தன்மைஇயம்பவேண்டில். (௬)

அல்லார்மிடற்றன்உடன்அச்சுதன்தன்னைஏத்தும்
சொல்லானஇந்தத்தொகைநூல்மிகும்தொல்லைநூல்கள்
எல்லாம்உணர்ந்தபெரியோர்செவிக்கேற்கும்ஒன்றும்
கல்லாதவர்க்கும்பொருள்செய்யக்கருத்ததாமா. (௭)

மென்கன்றுமென்றுதழைகோதியவீறுபோல
புன்கல்விகொண்டுபெரியோரைப்பொருள்செயாமல்
வன்கண்மைபேசும்மனமாச்சரமாக்கள்அந்த
நன்கஞ்சம்மேவும்அயன்வாய்மையும்நம்பலார்ஆல். (௮)

நற்பாரில்மூடர்சிலபேர்நயவார்களேனும்
பொற்பாயினஇப்பனுவற்கொருபுன்மைஆகா
கற்பூரராசிவிலைதன்னைக்கடைக்குள்உப்பு
விற்பான்ஒருத்தன்அறியான்அறின்வீறுபோமோ. (௯)

மாகத்தொடுபாரைவிழுங்குமகாந்தகாரம்
போகக்கதிரோன்உதயம்செயும்பொங்குதோற்றம்
சாகைத்தருவின்பெரும்பொந்துதனில்பதுங்கும்
கூகைக்கிதம்அன்றதனால்ஒருகுற்றம்உண்டோ. (௰)

உலகத்தியற்கைஇதுஆதலில்ஒடைநெற்றி
மலைசெற்றதேவனெடுநாரணன்வண்மைஎல்லாம்
பலபட்டநூலில்பிரமாணம்பகர்ந்துகாட்டி.
நிலைநிற்கும்ஆறுபுவிமீதுநிகழ்த்துவேன்ஆல் (௰௧)

வன்பாய்ச்சல்பாயப்பதுங்கும்வரிவேங்கைபொங்கி
மென்பாய்ச்சல்அன்றிஅறியாதுவெள்ளாடக்கம்
நன்பாக்கள்வல்லோர்நவின்றார்அதுஆனாலிலக்கு
புன்பாக்கருதும்தமியேன்புகலாதொழிந்தேன். (௰௨)

௪-வது. புராணவிவேகப்படலம்முற்றும். ஆ. திருவிருத்தம். [௱௰௮]

அரிதாசர்திருவடிகளேசரணம்.

---

## ௫-வது, நகரப்படலம்.

மருவார்துளவத்தொடைமால்ஒருமச்சம்ஆகி
பெருவாரிதியில்புகுசோமுகன்பேரைமாள்வித்
துருவாகியமாமறையைக்கமலோதயற்கு
திருவாய்மலர்ந்தான்ஒருசீதளச்செய்யகுன்றில். (௧)

வில்லார் நுதலில் திரிபுண்டரவெள்ளை நீறும்
அல்லார் குழல்மேல் அணிகொன்றையும் அக்குமாலை
புல்லாவளர்பொன்முலையும்பொலிவாக இன்பச்
சொல்லார் அமுதன்னவள்மற்றும்ஓர் தோகைபோலுள். ([illegible])

இம்மான் அனையார் இருவோர்களும்மேவியான்முன்
அம்மால் அரனைப்புகழ்கின்றவர் ஆகநாட்டும்
செம்மாதனைநேர்நகைஆரணச்செல்வமாதும்
மைம்மாமுகில்நேர்குழல் ஆகமவல்லி ஆகும். ([illegible])

காதைப்படியும்கடைப்பார்வைகொள்காமவேதம்
ஓதப்படிவம்உயிர்மேவிஉலாயஎன்ன
சீதப்படிகத்தொளிர் ஆரணிதீர்த்தம் ஆட
வேதப்படிவாய் அணைந்தார் இவர்மின்கள்போல. ([illegible])

சு - வது, நதிப்படலம் முற்றும். ஆ திருவிருத்தம். [௩௰௩]
அரிதாசர்திருவடிகளேசரணம்.

---

## எ - வது, தோத்திரப்படலம்.

வேறு

அனையவர்நான்முகன் அவ்வழிவேள்விசெய்தவாறுதம்படிவாய்
புனிதமகாநதிசகலமும்இவ்வழிபோதுகஎன்றருளா
தனதுகைமேவிய அரணிகொடேமிகுதனாமிசைகீறுதலால்
கனமலிஆரணிஆனநதிப்புனல்கண்டுமகிழ்ந்தனனே. (௧)

களிமையிலேமிகர் அனையவர் ஆரணிகண்டுகளித்தளவே
இளமதிநேர்நுதல் ஆகமவல்லினளும்பெயருங்கிசைவான்
குளிர்புனலின் துறையையடைந்தொளிர்கொன்றையும் அம்புலியும்
வளர்சடைவானவர்தம்பெருமானைமகிழ்ந்துதுதித்திடுவாள். (௨)

ஆலமரத்தை அடக்கியவித்தெனஅண்டம்எலாம்எளிதில்
சாலஅடக்கிஅளிப்பவனேதிகழ்சந்திரசேகரனே
மாலயனுக்கும்அனந்தமறைக்கும்நல்வானவருக்கும்எலாம்
மூலம்எனத்தகுகாரணனேநமமுக்கணனேநமவே. (௩)

மெய்ப்புனலில்குளிரும்கிளர்வன்னியில்வெம்மையும்மென்மலர்சேர்
ஒப்பறுநன்மணமும்மணியில்திகழ்ஒள்ஒளியும்எனஆய்
செப்புசராசரம்எங்கும்நிறைந்ததிகம்பரனேஅடையார்
முப்புரம்வேகநகைத்தவனேநமமுக்கணனேநமவே. (௪)

பால்விரவும்புனல்போல்முடிவுன்றெறிபொறிப்புவனங்களிலே
நால்விதவேதனும்முக்கணனும்தனிநாயகர்என்றிடயம்
மால்விளையச்செய்துநின்அருளால்வரும்மற்றவரோடொருவர்
போல்விளையாடுபரம்பரனேபரிபூரணனேநமவே. (௬)

அந்தமும்ஆதியும்ஆகியபேரொளிஆம்உனைமாமறையால்
முந்துணர்வோர்சிலர்அல்லதுமாறுகொள்மோசமதாம்வழியில்
தந்தபெருஞ்சமயங்களையேபரதத்துவமென்றுணர
புந்திமயக்கிடும்அச்சுதனேபரிபூரணனேநமவே. (௭)

இன்னனஆகியநாரணநாமம்இயம்பிவழுத்தியபின்
தன்னுளம்ஒத்துநிறைந்துதெளிந்தடம்புனலின்படியா
பொன்னிடகிரிதிகன்னிளனத்தருபூரணஆரணிஆம்
அன்னநடையின்கணவனென்மெல்லெனஆரணவல்லியுமே. (௮)

பொற்புளபட்டணிவித்தொளிர்மேனிபுலர்த்தியசேவடிக்கண்
நற்படிமக்கலம்உத்திடஆயிருநாமமும்இட்டுமகார்
பற்பலபூண்வனமாலைஅணிந்துபசுந்துளவம்புனையும்
தற்பரனேஎனஅன்பொடுகண்டஓர்கவியின்இருக்கதுவே. (௯)

எ-வது, தோத்திரப்படலம்முற்றும். ஆகதிருவிருத்தம். ([illegible])
அரிதாசர் திருவடிகளேசரணம்.

## அ - வது, கடாவிடைப்படலம்.

ஆரணவல்லியைஆகமவல்லிஅரும்பியகொங்கைநல்லாய்
நாரணனைப்பரதத்துவன்என்னவும்கண்அறிவெங்கள்குரும்
காரணன்என்னவும்ஈசனையும்கருகாவலன்என்னவும்நின்
பூரணன்என்னவும்என்னதிர்சொல்லினைபுகலுமதென்னதுவே. (௧)

ஓவியம்ஒப்பவள்அவ்வுரைதன்னைஉகந்துமகிழ்ந்தனள்ஆம்
பூவையிலப்படியேசிவனைச்சிலபொய்ம்மைமொழிந்தனர்
தேவர்துதிக்கும்முகுந்தன்மிகும்புகழ்செப்புதல்ஆயினும்
நாவுளவர்க்கும்அரீததுஇன்றுமக்கெளிதோஎனவே. (௨)

பூவைஇனிப்பலசொல்லுமதென்னபுராந்தகனுக்கெழில்மால்
நேரெனஆரணவல்லிகழ்ந்திணையில்லவர்க்கும்முகம்
சேரிமையிற்குறைகண்களில்வந்துதெரிந்திடுமோதெளிவின்
பேர்அறிவுக்கும்வரற்கவரற்கபிறங்குதல்என்றலுமே. (௩)

முற்கலோபநிடம்மேலோர்மொழிக்கிடும்பிரமவிந்து
சொற்குலாம்தாபனீயம்சுவாபனோபநிடம்ஞான
வற்கமோடியாச்சவற்கம்மயித்திராவருணம்மன்னும்
சிற்குணாலயம்தான்மந்திரவுபநிடம்மானதிபம். (கஉ)

கிளர்மகோபநிடம்காலாக்கினியுருத்திரம்சாபாலம்
துளவநாரணம்சுவேதாச்சுவதரம்சுபாலம்சொல்லாம்
அளவிலாப்பரமாற்பம்அதருவச்சிரம்என்றெண்ணி
தளமலரவன்சொல்வேதாந்தங்கள்முப்பத்திரண்டும். (கங)

ஆசறுசீர்வாசிட்டம்ஆரிதம்வியாதநன்னூல்
காசிபம்பரத்துவாசம்கணபராசரியம்அன்ன
பேசியசாத்திகத்தின்பெரும்பிரமாணம்தன்னை
சாசுதம்ஆகக்காட்டும்தருமசாத்திரங்கள்ஆறும். (கச)

ஆனதாக்கியம்கின்காத்தியாயனம்ஆத்திரேயம்
மானவம்யாச்சவற்கம்வைட்டிணவம்தானொன்றும்
மோனமாதவர்களோலேமொழிவதற்குரித்தாய்ப்பாரில்
ஞானயோர்புகழும்ஓர்ஆறிராசததருமநூலும். (கரு)

வாருகற்பத்தியம்சாம்வர்த்தம்ஔசனசம்சாத்தம்
நேருகோதமம்யாமிகம்எனநிகழ்த்தும்தன்மைப்
பேரினஆய்மெஞ்ஞானப்பெருந்தவமுனிவர்பேச
தாரணிவிரும்பும்ஆறுதாமததருமநூலும். (கசு)

கந்தம்ஆக்கினேயம்சைவம்கமடம்மச்சியம்இலிங்கம்
தந்தபேர்திகழும்தொல்லைத்தாமதபுராணம்ஆறும்
வந்தபாகவதம்பற்பம்வராகம்வைணவத்தினோடு
சிந்தைகூர்கருடம்நாரதீயம்சாத்திகங்கள்ஆறும். (கஎ)

பேசுசீர்ப்பிரமாண்டம்சொல்பிரமகைவர்த்தம்பேர்போம்
மாசிலாமார்க்கண்டேயம்வாமனம்பிரமம்மன்மேல்
வீசியகல்விச்செல்வம்மிகுபவுடிகம்என்றென்
றேசறுமுனிவோர்செய்தஇராசதபுராணம்ஆறும். (கஅ)

பார்க்கவம்சோமம்சாம்பம்பரவுசீர்வருணம்ஆர்க்கும்
எற்குமானவம்நற்காந்தம்இலங்குவாயவியம்செஞ்சொல்
நிற்கும்ஆய்திகழுகின்றசெழுந்துருவாசம்தேர்க்கும்
நாற்கடற்புவிக்குஞானநயனம்ஆம்நாரசிங்கம். (க௯)

நன்பராசரம்மாரீசம்நாரதம்காபிலம்சொல்
இன்பஆதித்தியம்கௌசிகபுராணம்வாசிட்டம்
முன்பதாம்பிரமாண்டம்சீர்மொழிசிவதருமமென்ன
ஒன்பதோடொன்பதாமுபபுராணங்கள்தாமும். (௨௰)

அங்கிராவியாதனோர்கற்பாலனோர்ஆபத்தம்பர்
தங்குசீர்வருணனோர்போதாயனமுனிசாபாலர்
துங்கஆரீதர்தாக்கர்சுமந்தமனோர்சுபோதர்
பொங்குமேலைகாக்கியார்வெம்புலிப்பெயார்ப்புனிதரொன்பார். (௨௧)

பிரமசம்பவர்பன்னீதிபெறுஞ்சமதக்கியார்சீர்
இருநிலம்புகழ்ந்திடுங்காரிடிவியாசினன்பைடீனன்
சரொன்றபெயரையுள்ளார்சாண்டிலமுனிவர்வாக்கால்
விரவிசரொன்பதாகிவீறுபமிருதிதானும். (௨௨)

பரத்துவாசன்வாசிட்டன்பராசரன்சவுனகன்சீர்
இரத்துநாரணன்ஆவிர்ப்புத்தினிமுனிநற்பத்தென்று
பிரத்துள்ளன்னனியதுப்பத்தான்இரவியநெற்பன்மன்பார்
உரைத்துமாவிலத்துநாட்டலுங்குசங்கிதைகள்தாமும். (௨௩)

பரவியபற்பம்பற்போற்பவமொழிவைட்டவம்புட்-
கரம்பிருநாரதீயங்காட்டிசேர்சனற்குமாரம்
வரநனகூபரம்சீர்வாசிட்டஞ்சனகம்மாலுந்
திரம்பிருசத்துவாக்கியந்திலகம்நற்புவனமோகம். (௨௪)

துன்னியபரமம்மாயேசுரஞ்செயம்பரமகீதி
மன்னுசாத்துவிதநாமம்வாய்த்தபவுரிடம்எனப்பேர்
பன்னுசங்கிதைநாற்றெட்டாம்பஞ்சராத்திரமுமன்பால்
நன்னிலம்மதித்தவைகானசம்மனுநாலும். (௨௫)

சிரணிகமைத்தன்னல்திருஅருள்பெறுவான்மீகர்
ஏரமர்வாக்கால்ஓதும்இராகவகாதையென்றும்
பாரதகாதைஆனபஞ்சமவேதமென்றும்
தாரணிமுழுதும்போற்றத்தகும்இதிகாசம்தாமும். (௨௬)

போதிடங்கொண்டஉந்திப்புராதனன்பூவைபங்கன்
ஆதரங்கூரமுன்னோன்ஆடியபாதனன்னால்
மாதிடம்ஆனபாரோர்மதித்தவாகடநூல்நீடும்
சோதிடம்முதலாகச்சொல்லியநூல்கள்தாமும். (௨௭)

காண்டகுவையாசிகம்காபிலம்கவுதமீயம்
நீண்டசைமினியம்பாணினீயம்நன்கீதிதை
மூண்டகாணுதம்என்றுமுனிவரால்மொழியப்பட்ட
மாண்டகுதெரிசனத்தின்வருக்கம்ஓர்மூன்றும்மூன்றும். (௨.௮)

யாதவம்மாயாவாதம் இரணியகெற்பம்பாரில்
வாதியர்க்கிடங்கொடாராமானுசமதம்நால்வேத
சாதனப்பார்க்கரம்சொல்தத்துவவாதம்என்ன
மேதையோர் ஆவோர் சொன்னமிருமதம்அறுக்கும்ஒன்றும் (௨.௯)

பஞ்சராத்திரம்நீள்சைவம்பவுத்தம்ஆருகதம்பாரில்
விஞ்சுசொற்சாருவாகும்மிருபசுபதம்ஆம்போர
நெஞ்சுவந்துவரிசூழும்நெடுநிலமாந்தர்தந்தம்
தஞ்சம்என்றனுசரிக்கும்சமயம்நாலு என்று ஈன்றேம். (௩.௰)

மற்றுளசமயநூலும்வரம்பறஇருமைபக்காந்தம்
பற்றியதென்னநெஞ்சில்பணிந்திடப்படைவேறின்றி
கற்றுமெய்ப்பொருள் ஆராய்ந்துகருத்தில்மாச்சரியம்நீக்கச்
செற்றவர்க்கன்றேதோன்றும்சிதரன்பமெனைவலாம். (௩.௧)

என்ன ஆகமமடந்தைஎயிற்றரும்பிலங்காகத்து
சொன்ன இந்நூல்கள்எல்லாம்துளைவமால்மைலைமான்றி
பின்னுசெஞ்சடையினான்தன்பெருமையேபோதோனென்ன
மின்னிகர்வேதவல்லிபீளவும்விளம்பல்உற்றான். (௩.௨)

இப்பெருநூல்கள்எல்லாம்ஈசன்மால்பெருமைதோன்ற
செப்புகையாலேஅன்றேசிறுமையும்பெருமைதாமும்
கைப்பதிவானநெல்லிக்கனிஎனக்கண்டதென்றேன்
அப்பொருள்சிந்தைசெய்யாதாகமவல்லிசொல்வாள். (௩.௩)

அழகிதேசொன்னாய்மின்னேஆரணவல்லியேஇப்
பழமறைநாலிம்மூன்றுபத்துடன்புராணம்ஆறும்
வழுவில்வேதாந்தம்என்றுவகுத்தமுப்பத்திரண்டும்
தழையும்நால்ஒன்பதானதருமசாத்திரங்கள்தாமும். (௩.௪)

தோமில்சங்கிதைகள் ஆதிசொன்னஇந்நூலும்அன்றி
காமிகம்யோகசம்சொல்காரணம்அசிதம்தீத்தம
தீமைதீர்சூக்குமம்பிம்பம்சிந்தியம்விசயம்வீரம்
மாமைசேர்கிரணம்சித்தம்வாதுளம்சுப்பிரபேதம். (௩.௫)

வேதமெய்ப்பொருள்கொள்வார்க்குவியாதகூந்திரமாற்நத்தால்
ஏதொருபொருட்குமுன்பின் இசைந்ததென்றுணைர்தல்வேண்டும்
ஓதுசாத்திரபுராணத்துறுபொருள்கொள்ளுவார்க்கு
பேதம்அற்றவ்வேதத்தைப்பின்செலப்பெறுதல்வேண்டும். (சுசு)

அப்படிஅன்றிமுக்கணன்பெயர்ஆரணத்தில்
வைப்புறஇருந்ததென்றேவலுவுடன்வழக்கும்வாதும்
செப்புதல்திறமையாகாச்சிறந்தசாத்திரபுராணம்
ஒப்பவேதத்துக்கேற்கஉரைப்பதுத்தரமதாகும். (சுரு)

சாத்திரம்வேதம்என்பதரணிமேல்மாந்தர்க்கெல்லாம்
நேத்திரம்இரண்டும்ஆகும்இகழ்த்திடியஇரண்டில்ஒன்று
மாத்திரம்இலாதார்காணுர்மற்றதூஉம்இலர்ஏதுக்கும்
பாத்திரர்அல்லர்அந்தர்என்றிவைபலவும்சொன்னுன். (சுசா)

அ - வது, கடாவிடைப்படலம் முற்றும். ஆ-திருவிருத்தம். [௱௰௧]

அரிதாசர்திருவடிகளேசரணம்.

## கூ - வது, அந்தணர்சந்திதிப்படலம்.

ஈதுரைசெய்யக்கேட்டஎழிற்சிவாகமமடந்தை
ஓதியஉலகுக்கெல்லாம்ஒருவன்என்றுரைக்கும்நாதன்
ஆதிரையானேஆகஅன்றிஒணத்தன்ஆக
வேதசாத்திரபுராணவிளக்கினுல்காண்டும்என்றான். (க)

மெல்லியல்இனையசொல்லவேதமாமடந்தைபார்மேல்
எல்லைஇல்கல்விஉள்ளாள்இவளுடன்யாவதொன்றும்
சொல்லவும்தகுமேசொன்னுல்சொன்னஉத்தரத்தைஒப்ப
வல்லளும்ஆகும்என்றுமனமகிழ்ந்தினிதிருந்தாள். (உ)

வேறு

நேரிழைமாதர்இன்னனசொல்லாமிகழ்காலத்
தாரணிஆருடித்தமதானஅனுட்டானம்
சீரியஆகச்செய்துமுடித்துத்திகழ்வேதம்
பாரில்அனேகம்மெய்யொடுலாவும்படிஎன்ன. (௩)

நெற்றிப்புண்டரர்பொற்புளநன்மேனியர்சென்னி
சுற்றிப்போர்த்துதரித்தவர்காவித்துகிலாளர்
பற்றைச்செற்றவர்மென்கலையின்தோல்பயில்யோகத்
தொற்றைத்தண்டினர்முத்தண்டினர்அங்கொருசாரார். (௪)

கவித்தமிழற்குடையார்குண்டிகையார்கழையார்கீள்
பவித்திரம்ஆன தருப்பைசமித்துபயில்கையார்
தவத்தொழில்அல்லதுமற்றொருதன்மைச்சரிதத்தால்
உவத்தல்இலாநெஞ்சந்தணர்மற்றங்கொருசாரார். (ரு)

வாருவில்வெள்வளை ஆழிதரிப்பார்வனமாலைக்
கோகனகத்தவர்பன்னிருநாமக்குறிஉள்ளார்
மேகநிறத்திருமால்கழல்அல்லால்வியவாதார்
யோகியர்ஞானப்பாகவதப்பேர்ஒருசாரார். (சா)

பூதியின்கீள்முப்புண்டரர்மார்பில்புரிநூலார்
சோதியதாகச்சூழ்சடையார்நற்சுவல்தோலார்
வேதபுராணத்தாகமநூலின்விரிவெல்லாம்
ஓதியமேதைப்பாசுபதத்தார்ஒருசாரார். (எ)

ஆதாரத்தெய்வத்திருமால்பொன்அடிதாழ
போதாகிற்பார்வேதபுராணப்பொருள்கேளா
வேதாராமத்தெய்துதலும்தேன்மிகுவேரித்
தாதார்ஓதித்தையலர்நின்றஞ்சலிசெய்தார். (அ)

அஞ்சலிசெய்தவருக்கருள்செய்தங்கனைவோரும்
பஞ்சியல்மெல்லடியீர்இருவீர்என்பகர்கின்றீர்
எஞ்சல்இல்வேதபுராணவழக்கென்இவண்என்ன
கொஞ்சுகிளிப்போல்இன்சொல்உரைப்பார்கொடிஅன்னார். (கூ)

எல்லைஇல்ஞானச்செல்வம்உளீர்யாம்இருவோம்எம்
புல்லறிவால்அச்சங்கரர்மாலைப்புகழ்கின்றேம்
வல்லிகொள்சோலைக்கண்சிறுபோதுவசித்துப்பின்
நல்லதுதீதென்றும்மில்மகிழ்ந்துநடப்பீர் ஆல். (ய)

என்றுபணிந்தளவில்தவவேதியர்எல்லோரும்
மின்திகழ்பூண்முலையார்நினைவுக்குவியப்பெய்தா
நன்றிரும்என்றவரோடும்இருந்தனர்நல்வாசம்
குன்றுதல்இன்றிவிளங்கியவேதக்குளிர்காவில். (யக)

கூ-வது, அந்தணர்சந்நிதிப்படலம் முற்றும். ஆ. திருவிருத்தம். [உ௱உ]

பாயிரகாண்டம்-க௫ படலம்-கூ௫ கூடிய திருவிருத்தம். உ௱உ.

அரிதாசர்திருவடிகளேசரணம்.

சர்வம்விஷ்ணுமயம்ஜகத்.

# உ-வது, பூர்வகாண்டம்.

## க-வது, உலகவழக்கப்படலம்.

### முதலாவது,

## அறுவத்துமூவர்பரிச்சேதம்.

ஆரநகையாகமமாமடந்தையப்போ
தாரணவல்லியைநோக்கியணங்கேயெங்கள்
ஏர்மருவுசிவசமயமகிமைநூலால்
எடுத்திசைவித்திடவேண்டியிருக்குமோயிப்
பாரறியகலியுகதிட்டாந்தமாகப்
பரமனடிபோற்றியறுபத்துமூவர்
சீரியவாகியபதங்கள்பெற்றவாறும்
தெய்விகமும்போதாவோதெளிவார்க்கென்றாள் (க)

அவ்வுரையாரணவல்லியமையக்கேளா
ஆகமவல்லியைநோக்கியாலகால
மைவளர்கண்டத்தானுக்கிவையோகொண்டோர்
மகிமைவிரித்துரைக்கின்றாய்வழிபட்டோர்க்கு
எவ்வகையில்தேவர்களும்பதமும்பேறும்
ஈவதற்குசக்தியில்லாதிருக்கின்றாரோ
தெய்விகமும்அவரவர்தம்சமயந்தோறும்
திட்டாந்தமாயுலகிற்சிறவாதுண்டோ. (உ)

இங்கிவைகள்சிறக்கயரிசமயத்தாழ்வார்
ஈராவருடனெழுநூற்றெழுபதின்மர்
பொங்கியசீர்தத்துவவாதியர்களெல்லாம்
பூதலத்தில்முத்தியினைப்பொருந்தப்பெற்றார்
மங்கைநல்லாய்சங்கரனேமுதலாம்தேவர்
மகிழ்ந்துதவும்பதங்களுக்கும்மணிகூராழி
அங்கைநெடுமாலுதவும்பதந்தனக்கும்
ஆயும்கால்அந்தராந்தரமுமுண்டே. (ங)

மேலவைசொல்வேனிங்கேசொலில்பரப்பாம்
வெங்காளவிடமுண்டான்வெண்ணெயுண்டான்
சீலமிகுமகிமைதனையுரைக்குநாமம்
திகழ்வேதநூலொடுசாத்திரங்களென்னும்

பாலிருக்கநீருந்தும்படியேபோலப்
பார்வழக்கைப்பாராட்டிப்பகர்வதானல்
ஏலுமுணருடையார்கள்மனத்துக்கெல்லாம்
இசைந்திடுமோஎன்னவிரிந்தினிதுசொன்னள். (சு)

உ-வது, சிற்பசாத்திரப் பரிச்சேதம்.

ஆயிழையாகமவல்லியதுநன்றென்று
ஆரணவல்லியைநோக்கியங்கைதன்னில்
மேயபொருள்காண்பதற்கேன்மிகுகண்ணடி
விடையவனேபுள்ளவனேவிளங்குமூருநர்
கோயில்தொறும்பிரமத்தானத்துவாழ்வார்
குளிர்சடையோன்கோயில்குடதிசையிலுங்கள்
மாயவனேபரிவாரதெய்வமானன்
மற்றிதனல்தெரியாதோமகிமையென்றுள். (க)

அன்னதுகேட்டாகமமெல்லியலுக்கந்த
ஆரணமெல்லியலுமைம்பாளானல்நீஅத்
தொன்னெறியாம்வித்தாரச்சிற்பநூலின்
துணிபொருளோர்ந்திலைபோலும்துலங்கும்அன்னூல்
மின்னியவிச்சுவதருமம்விச்சுவேசம்
விச்சுவசாரம்விருத்தம்மிகுதாவட்டம்
மன்னுநளமயமனுமான்வித்துப்பானு
மானகற்பாரியஞ்சிருட்டமானசாரம். (உ)

வத்துவித்தியாபதிபாராசரீயம்
மாரிடகஞ்சயித்தக்கம்வரத்துப்போதம்
வித்தாரமயிந்திரமால்வச்சிரஞ்சௌமம்
விச்சுவகாசிபமகதந்திரம்விசாலம்
சித்திரங்காபிலங்காலயூபம்பாரிற்
றிகழ்நாமசங்கிதைசாத்திகஞ்சீராக
வைத்துளவிச்சுவபோதமாதிசாரம்
மதிப்பானவெருக்சுருதமானபோதம். (ங)

இத்தகையவாகியசிற்பங்கள்முப்பத்
திரண்டுளயன்னவைவிழியமித்தியாதோருநர்க்கு
மத்திமமாம்பிரமதானத்துச்செங்கண்
மாயவனைப்பதிட்டித்துமற்றுளோரை

உத்தமமாம்திக்குத்தேவதைகளாக
ஊர்ப்புறத்துப்பதிட்டைசெயவுமாக்கும்நீங்கள்
பத்திசெயும்சிவாலயமத்திமமட்டேகாண்
பாவனமாகியலிங்கப்பதிட்டைசொல்லும். (௪)

கிதவரிமுரல்துளவத்தொடைசூழ்மால்மா
கெற்பகிரகத்தியற்கைகிளத்தநீகேள்
பீதகவாடையர்பஞ்சபேரந்தன்னில்
பிரமத்தானத்திருக்கப்பெறுபோதுங்கள்
காதுகமாம்பேரமதில்செய்தபூசை
கருத்தாவாம்விம்பத்தைக்கலந்துபல்கும்
ஆதலினல்தத்தமதாலயத்துமன்றி
அணிநகர்க்குநடுவுறைவாரநிகரன்றே. (௫)

ஏரணியும்சிவாகமமாமடந்தைகேளாய்
இவ்வளவோயின்னமின்னமியம்பக்கேளித்
தாரணியெண்பிரார்மியமாம்சிற்பநூலில்
சயனமுடனசனந்தானங்களென்ன
நாரணனுருவொருமூன்றதிலொன்றென்று
நன்னூலுபேதமவைநன்னூலுக்கும்
சீரணியும்திருநாமம்யோகம்போகம்
சிருட்டிசங்காரங்களெனச்சிறக்குமாதோ. (௬)

சாத்திகராசததாமதத்தால்திட்டித்
தல்காத்தல்சங்கரித்தல்தொழிலாமிந்தக்
கீர்த்திபுனைதிருமாற்குப்பதிட்டைத்தானம்
கிளர்த்திடத்துமவர்கெற்பக்கிரகந்தன்னை
ஏத்தரியபாகங்களேழெட்டெட்
டெண்பத்தொன்றீரொட்டுக்கீரொட்டாகச்
சூத்திரமிட்டொருநாலுவிதங்களாகச்
சொல்லியிடுமாலயங்கள்தோறுந்தோறும். (௭)

நாலுவகையாதனமாம்மூலபேர
நாரணனைப்பிரமத்தானத்துச்செம்பொற்
கோலமலராளவனிக்கோதையோடும்
கூடிவிளங்கும்பதிட்டைகூறுநிற்கும்

ஏலுமவர்சயனத்தானங்களான
இருநாலுமூர்த்திக்குமியல்பால்மிக்க
சீலமிகும்கவுத்துவங்கள்தனக்குமந்தத்
திசைமுகத்தான்பிரதிட்டைசெப்புமாதோ. (அ)

ஈதுபிரமத்தானத்தியற்கைமின்னே
எழிற்பரிவாரத்தியற்கையினிக்கேளுங்கள்
மாதுறைபாகன்சிற்பவாக்கினால்நாம்
மால்கோயில்மருவுபரிவாரமென்றும்
காதலுறுமிந்திரனும்நாமுஞ்சேயும்
கணபதியும்துவாரங்கள்காப்போமென்றும்
ஓதியதுபோல்சிவனாலயத்திலேநாம்
உயர்திசைத்தேவதையெனமாலுரைத்ததுண்டோ. (௯)

அன்னதலாற்பிராமியத்திலிரண்டுமூன்றும்
ஆகியவைத்தியாயத்தானத்தினோடு
மன்னியதாரகமானதிருமாலுக்கு
மதிவளரும்சடையானைமலருளானைக்
கின்னரரைக்கிம்புருடர்தம்மைமற்றைக்
கெருடரைக்கந்தற்பரைக்கேசரரையேனைப்
பன்னகரைத்தும்புருநாரதரையெல்லாம்
பரிவாரகணமாகப்பகருமன்றே. (௰)

சக்கரக்கைநெடுமாலையல்லாத்தேவர்
சகலரும்தம்மாலயங்கள்தன்னிலன்றி
மிக்கபெருஞ்செல்வம்விளைவிக்கமாட்டார்
வேதாந்தப்பொருளானவிண்டுமூர்த்தி
எக்கடவுளாலயத்துளிருக்குமேனும்
இனியபெருஞ்செல்வம்விளைவித்திடுமென்றோதும்
தக்கபராசரசிற்பமதனால்மின்னே
தாரணியிலார்செல்வம்தனைவேண்டாதார். (௰௧)

பாவையொருபாகத்தானுடனேவிங்கோற்
பலமூர்த்திசெயவீரபத்திரதேவன்
மேவியதெக்கணமூர்த்தியென்னுமிந்த
மேன்மைபுனைவிக்கிரகவிதத்தையெல்லாம்

காவிவிழியாகமமாமடந்தைநல்லாய்
கண்ணனுக்குப்பரிவாரகணமென்றேதும்
தாவுபராசரசமயச்சிற்பமத்தை
சாத்திரமன்றென்றினிநாம்தள்ளலாமோ. (மஉ)

ஆரணவாகியமானசயினன்புத்தன்
ஆலயத்துக்கிலக்கணமும்மறைதலால்சங்
கிரணநூலேசிற்பமானபோதும்
கேசவனையேமகிமைகிளத்தாசிற்கும்
தாரணியில்மற்றுமுளவிசேடநூல்கள்
சங்காழிகதைவடிவாள்சார்ங்கமேந்தும்
நாரணனர்கோயிலுக்குப்பரிவாரங்கள்
நாலுவிதந்தானுகநவிலுமன்றே. (மஙு)

தன்னையரனைப்பிரமன்றனைமற்றோரைச்
சாத்துவிதராசததாமதச்சங்கீர்ணர்
என்னவகுத்தவதாரத்தெய்வம்பத்தும்
இதிற்சுத்தபரிவாரமென்கையாலே
அன்னவரையாலயங்களெங்குஞ்சூழ
அருச்சிப்பார்அரன்பிரமனுதியாகப்
பன்னியமத்திமமதமமாம்பரிவாரத்தைப்
பலஇடத்துமேவிரும்பிப்பதிட்டைசெய்யார். (மச)

வைப்புளசாத்திகத்தெய்வம்தன்னையுந்தா
மதகுணராசதகுணமாம்தெய்வமாகச்
செப்பிடினும்பெருப்பேருபெற்றேமென்று
சிவசமயத்தோர்மாலைத்திருமேனிக்கொண்
டிப்புவியில்பதிட்டிப்பாரெம்மனேரும்
இதிற்பழுதேதுக்கெனவேோரிடங்கள்தம்மில்
அப்பெரியமகிமையுளசிற்பநூலை
அம்புவியில்பிரமாணமாக்கவேண்டி. (மரு)

பணியணியுஞ்சங்கரனைத்திருமால்கோயிற்
பரிவாரதேவதையாய்ப்பதிட்டித்தற்கு
மணிநகையாய்திட்டாந்தம்வேண்டினம்பி
மருவுதிருக்குறுங்குடியாமகத்தானத்தும்
திணிநெடுவேய்நிகர்தோட்பங்கயத்துச்
செல்விசிந்தைபிரியாதவொருதேவன்வாழும்

அணிதிகழ்வெள்ளறைதனினுமாதியான
அரிவாசபுரத்திலும்பார்த்தறியலாமே. (௰௬)

நாகரந்திராவிடம்வேசரஞ்சொல்சாதி
நான்மறையோனரபாலன்வணிகனண்ணும்
மாகுணஞ்சாத்திகரசத்தாமதங்கடெய்வம்
மணிவண்ணனயன்கிருத்திவாசனென்ன
ஊகுளவாலயத்தாம்விமானமூன்றை
உத்தமமத்திமமதமமுறையாநின்ற
தாகலினுலவரவர்தங்குணமுஞ்சாதி
அடைவுமதிலேதெளியவறியலாமே. (௰௭)

இமையவனாவிந்தியத்தினிடைசாத்தீகம்
எழிற்புருடலிங்கமதற்கிறைவன்மாயோன்
தமகுணம்விந்தியத்துக்குங்கிட்ணவேணி
தனக்குநடுச்சிவன்றெய்வஞ்சண்டலிங்கம்
குமரிநதிகிட்ணையினடுப்பெண்பூமி
கோமலரோனிராசதமாங்குணமிப்பார்க்கு
விமலவிமானப்பெயர்நாகரமுந்துங்க
வேசரமுமிகுத்ததிராவிடமுமாமே. (௰௮)

சாதியுமந்தணர்வணிகர்நிருபரொன்னச்
சாற்றியிடுமிகுபராசரியசிற்பம்
ஈதுமலாற்பிராமியத்திற்செங்கண்மாலே
எல்லார்க்குமீசனிவனென்றும்வேறு
நாதனிலானென்றுநிச்சுலோகந்தன்னில்
நாட்டியுரைத்திடுமூன்றுநயனத்தோடு
மாதவனைச்சங்கராசயனந்தன்னில்
மகப்பதிட்டைசொல்லுமிதுமற்றுங்கேளாய். (௰௯)

மானோபகரணத்திற்காலபேதம்
வகுத்துரைக்குமவ்விடத்துமலருளானோ
டானேறுமீசனையும்படைத்ததேவன்
அரவணையானென்பதடையாளமாக
மீனேயதடங்கணுகமந்துமானே
விளங்கியகேசவனுமவியாக்கியானம்
தானேதிவைத்தவுயர்சிற்பத்தாலும்
சங்கரற்குநாரணனுர்தலைவனென்றுள். (௨௰)

௧ - வது, உலகவழக்கப்படலம் முற்றும். ஆ திருவிருத்தம் ௨௬.

அரிதாசர்திருவடிகளேசரணம்.

## ௨-வது, வராகாவதாரப்படலம்.

### க - வது, திருவாழிமலையென்கிற திருவண்ணாமலைப் பரிச்சேதம்.

வேறு.

இன்னசொற்சுருதிமெல்லியலிசைத்திடநகைத்திவளுரைப்பான்
சொன்னசிற்பத்துநூனிற்கமும்மதகரித்தோலுடுத்தான்
சென்னியைத்திசைமுகன்றேடினுனிருபதந்தேடுகைக்கே
மின்னெயிற்றொருதனிப்பன்றியாய்நின்றனன்விண்டுவென்றான். (க)

என்றலுஞ்சுருதிமானவிலுவாள்வைதிகத்தியல்புராணத்
தொன்றிலும்பணியிலாவசனமேயுரைசெய்தாலுருதியுண்டோ
துன்றுபல்பணிபொருந்திருதனத்தாகமத்தோகையேயான்
ஒன்றுநின்மனமுடன்படவிளம்புவனதின்றுறுதிகொள்வாய். (உ)

பாரளந்தருளுநாரணன்றனுட்பட்டவன்றே
மேருவுங்கயிலையுஞ்சிவனுமம்புதிகளும்வேறுமெல்லாம்
ஆரணம்புகழுவவ்வாழியானகிலமுண்டருளுமந்நாள்
நாரிபாகனுமவன்றிருவயிற்றன்றியேநழுவினானோ. (ஙு)

சரிவளைக்கையினாயீதுநிற்கவுமெசுச்சாகைதன்னில்
கருதுமாதிப்பருச்சத்தின்மேவுமனுவாகங்கண்மூன்றில்
பரவுசெஞ்சொல்லினும்பாரமாத்துமமுதற்பலவிடத்தும்
விரவுமாலேனமானதுநிலந்தாங்கவென்றேவிளம்பும். (௪)

ஏமமாலேனமாய்நின்றதிந்நிலைமையேயென்றியம்பும்
நாமவேதத்துடன்மாறுபாடாகவேநவில்வவெல்லாம்
தாமதம்புனையுநூலந்தநூலியல்புமேற்சாற்றினன்றோ
தேமிகுங்குழலினாயென்னநீடாகமத்தெரிவைசொல்வாள். (ரு)

---

### உ-வது, மோகினிவேடமென்கிற நாச்சியார்திருக்கோலப்பரிச்சேதம்.

ஆதிநாராயணனீடுவாராகமானதனையிவ்வா
றோதுபார்தாங்குகைக்கவதரித்தானெனவுத்தரித்தாய்
தீதிலாவந்தமாறிங்கள்சூடிக்குநற்றேவியாகிக்
காதலாமுன்புபின்சென்றதற்கேதுகேட்டுரைப்பாய். (க)

பையுடைப்ஃறலைப்பன்னகத்தரசனிற்பள்ளிகொள்ளும்
மையெழிற்கொண்டமால்மிக்கமோகினியெனும்வடிவதாய்முன்
கையிலக்கினிமழுக்கன்றுமானேடுகபாலந்தரிக்கும்
ஐயனுக்கலகிலாவையனைப்பெற்றதற்கையமுண்டோ. (உ)

நேரிழாய்கலாவிடுகூருமமெனுநிகழ்புராணத்
தேருலாவத்தியாயங்கடான்முப்பதோடெட்டினூடே
நாரணன்வனிதையாய்நக்கனோர்புருடனாய்நலமதாகும்
தாருகாவனமதிற்சஞ்சரித்தாரெனுந்தன்மைபொய்யோ. (௩)

என்னவாகமமட்டபாவைசொல்லலுநகைத்திரதமேவும்
கன்னனேராமொழிச்சுருதிமாமங்கையுங்கட்டுரைப்பாள்
அன்னமேஇங்குநீசொன்னசெஞ்சொற்களுக்கடைவதாகப்
பன்னிரியொன்றொன்றதாயுந்தரந்தெளிவுறப்பகருவென்கேள். (௪)

கொன்றையஞ்செஞ்சடைச்சங்கரன்றுங்கவைகுந்தமேவித்
துன்றுபைந்தண்டுழாய்மாயனைக்கண்டநோர்தொல்லைநாளில்
இன்றுபோலென்றுமுள்ளாய்சுரர்க்கமுதளித்திடுவதற்காய்
நின்றநின்பெண்ணுருக்காணவிச்சித்ததென்னெஞ்சமென்றான். (௫)

நெற்றிசேர்விழியினனிதுபகர்ந்திடுதலுநேமிமாலும்
கற்றைவார்சடையினாய்நீயுமவ்வடிவினைக்கண்டபோழ்தே
பற்றுசிந்தையனுமாய்மாயையாகியவலைப்படுதியென்றான்
கொற்றமூவிலைநெடும்படையினன்மீளவுங்கூறலுற்றான். (௬)

அழைக்குமானைக்குமன்றஞ்சலென்றுதவுகூராழியாய்நீ
இழைக்குமாயைக்குநானுள்ளலேனெனநகைத்தெம்பிரானும்
மழைக்குலஞ்சார்வதோர்சந்தனச்சோலையும்வாவியும்பொன்
தழைக்குமின்னாசனுஞ்செய்ததிற்றானுமோர்தையலானான். (௭)

கன்னியைப்பொன்னினாசவினைநிர்ந்தளவிலேகௌரியுந்தன்
சென்னியிற்கங்கையும்நகுவரென்றதனையோர்சிறிதுமெண்ணான்
மன்னுநற்பரிமளப்புதுமலர்க்கணுகுநிர்வண்டுபோலம்
மின்னுருக்கொண்டமோகினிதனைத்தழுவமேல்விழுவதானான். (௮)

மானெனத்தகையகண்வல்லிபொன்னாசன்மேன்மருவினனம்
மேனியைத்தொடுமெனுநிலனிழிந்தோடவவ்விடையினானும்
கானலைப்புனலெனத்தொடருவார்போனெடுங்கானுமாறும்
தானிளைப்புறநடந்தோடிவெள்ளருவிகடாளினூர. (௯)

கிட்டவந்தளவிலேதன்னுருக்கொண்டுமால்கிளரநின்றான்
திட்டமிங்கதிகமாயைக்குளானேமெனச்சிந்தைசெய்யாக்
கட்டுசெஞ்சடையனுநாணினனென்றுபாகவதமங்கோ
தட்டகக்கந்தன்குரைசெயுங்காரணத்தடவிதன்றோ. (௰)

